உ

திருச்சிற்றம்பலம்

# முப் பாவை

(திருப்பாவை, திருவெம்பாவை, திருஞானப்பாவை)



வெளியிட்டோர் :
சிவத்திரு சிவகுமார மௌனகுரு சுவாமிகள்
அருளாசியின்படி
கருப்பண முதலியார் ஸ்டோர்ஸ்,
பட்டு, நூல், கைத்தறி ஜவுளி வியாபாரம்,
53, கிடங்குத் தெரு, சென்னை-1.

ஸ்ரீலஸ்ரீ சிவ குமார மௌனகுரு சுவாமிகள்
அருளிய நூல்கள்.

---

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| சிவாமிர்தம் ஆத்மஞானம் (ராப்பர் பைண்டு) | | 3 | 00 |
| ,, (காலிகோ பைண்டு) | | 4 | 00 |
| திரு ஞானப் பாவை (தனிப்புத்தகம்) | ... | 0 | 25 |
| ஆத்மஞான பாஷியம் அல்லது பக்த இன்பசாகரம் | ... | 1 | 00 |
| தஞ்சையம்பதி தலபுராணம் | ... | 0 | 50 |
| பக்திஞான பல உண்மை விளக்க வேடிக்கை இன்பசாகரம் (தனிப்புத்தகம்) | ... | 0 | 75 |
| ஆதிபூர்வக்யான உண்மைப் பிரகாசம் | ... | 1 | 50 |

கிடைக்குமிடம் :

**சிவா அமிர்த**
**மௌனஞான சபை,**

திருவொற்றீஸ்வரர் இலவச உயர்நிலைப்பள்ளி,
தூஸ் — வேப்பேரி — சென்னை-7.

5-1

உ

திருச்சிற்றம்பலம்

# முப் பாவை

ஸ்ரீ ஆண்டாள் அம்மையார் அருளிய

## திருப்பாவை

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

## திருவெம்பாவை

ஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள் அருளிய

## திருஞானப்பாவை

இஃது

ஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமி அவர்கள் விசுவாவசுஹு சித்திரைமீ பௌர்ணமியின்போது சென்னையில் நடத்திய முப்பாவை மாநாட்டில்

சென்னை கிடங்குத் தெரு,
பிரபல கைத்தறி, பட்டு, நூல் ஜவுளி வியாபாரம்
கருப்பண முதலியார் ஸ்டோர்ஸ்
உரிமையாளர் :
திரு. ந. க. மாரிமுத்து முதலியார்
அவர்களால் அச்சிட்டு எல்லோருக்கும்
அன்பளிப்பாக அளிக்கப்பெற்றது.

1965. ஏப்ரல் 16, 17, 18.

ஓம்

# முன்னுரை

---

அகண்ட பரிபூரண சத்து சித்து ஆனந்த சொருபமாய் விளங்கக் கூடிய பரப்பிரம்மத்தினிடத்தே இருந்து ஆன்ம கோடிகள் பிரிந்து வந்து இவ்வுலகில் உடலை உற்று நின்று அறியாமையென்னும் அஞ்ஞானத்தினுல் இரு வினையுற்று செனன மரணமென்னும் பவசாகரமுற்று மூவாசைமுதலிய பலவிதத் துன்பமுற்றலைந்து, அஞ்ஞானமாகிய இருளில் மோகமென்னும் நித்திரையில் கனவு என்னும் உலக வாழ்வில் மூழ்கி இருக்கக்கூடிய ஆன்மகோடிகளைத் தட்டி எழுப்பி இறைவனையும் அவனை அடையக்கூடிய ஞான சாதனைகளையும் அறிவித்து அதில் ஈடுபடச் செய்து மனத் தெளிவும் தூய்மையும் பெற்று ஆத்ம ஞான நிலையும் தம் சுய வடிவையும் பேரின்ப போகத்தையும் அடைந்து அனுபவித்து பின்பு பரப்பிரம்மத்தினிடத்தே ஐக்யமென்னும் பர முத்திப் பதவி அடைவதாகும்.

இதற்கிணங்க ஸ்ரீ ஆண்டாள் அம்மையார் அருளிய திருப்பாவை, ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவெம்பாவை என்னும் பாவைப் பாடல்களைப் பருவமடையாத கன்னிப் பெண்கள் மார்கழி நோன்புற்று அதிகாலையில் நீராடி அன்பு-பக்தியுடன் ஈசுரனையும் திருமாலையும்பாடி அவர் தம் மெய்யன்பர்களையே தங்களுக்குக் கணவர்களாக அளிக்கவும் உலகில் நல்ல மழை பெய்து நவதானியங்கள் எல்லாம் விளைந்து செழிப்புற்று ஆனந்தமாக வாழவும் வரம் கேட்டலாகும். ஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள் அருளிய திருஞானப்பாவை என்னும் பாவைப் பாடல்களை திருமணப் பருவமுற்று ஆத்ம ஞானிகளைத் திருமணம் செய்து இன்ப சுகபோகத்தை அடைந்து சித்திரை நீராடிப் பாடி அனுபவிப்பதாகும்.

அதாவது மார்கழி மாதம் நோன்புற்ற கன்னிப் பெண்கள் அதன் பலனுகத் தை மாதம் வளர்ச்சியடைந்து மாசி மாதம் திருமணப் பருவமுற்று பங்குனி மாதம் நல்ல திடம்

பெற்றும் உலகில் மழை பெய்து விளைந்து செழிப்புற்றும் இன்புறும் தருணம் சித்திரை மாதம். மெய்யன்பர்களாகிய ஞானிகளைப் புருடர்களாகத் திருமணம் செய்தும் பேரின்ப போகத்தை அனுபவிப்பதாகும்.

வசந்த காலமும் வேனிற் காலமுமான சித்திரை மாதம் நோன்புற்று இன்பம் பொருந்திய நீரில் மூழ்கி நீராடிப் பாடி ஆனந்தமாக விளையாடுவதாகும். அதாவது பேரின்ப சாகரத்தில் மூழ்கி விளையாடி அப்போகத்தை அனுபவிப்பதாகும்.

தேவர்களுக்கு ஒரு வருடம் ஒருநாள் என்கிற முறையில் மார்கழி மாதம் விடியற்காலை நேரமாகும். தெட்சணாயனம் முடிவடைகிறது. சூரிய உதயமானால் பகல் காலம் தை மாதம் உத்திராயணம் ஆரம்ப காலம். இது ஆத்ம ஞான நிலையையும் பேரின்ப போகத்தையும் அடைதற்குரிய காலமாகும்.

ஆகவே சித்திரை மாதம் திருஞானப்பாவை நோன்புற்று சூரிய உதயத்தில் நீராடி அடியவர்களுக்கு அன்னமளித்தும் உண்மையாகவும் தூய்மையாகவும் இருந்து **எல்லாம் வல்ல பரஞ்சோதி** ஈசனை அன்புடன் பாடி ஆத்ம ஞான நிலையும் உபசாந்தியும் பேரின்பபோகத்தையும் அடைந்து அனுபவிப்பீர்களாக.

முப்பாவை என்னும் பக்தி யோகம் ஞானம் என்னும் உயர் நிலைகளுக்குரிய இவ்வரிய அருள் ஞான நூலினைத் தரும கைங்கரியமாக அச்சிட்டு எல்லோருக்கும் அன்பளிப்பாக அளித்த கருப்பண முதலியார் ஸ்டோர்ஸ் உரிமையாளரும், சிவநேசச் செல்வரும், தரும சிந்தனை உடையவருமான திருவாளர் ந. க. மாரிமுத்து முதலியார் அவர்களுக்கு எல்லாம் வல்ல ஸ்ரீபரஞ்சோதி ஈசனது திருவருளால் இக பர சுக போகத்திற்குரிய எல்லா நலன்களும் மென்மேலும் உண்டாவதாக.

ஓம் சாந்தி — ஓம் சாந்தி — ஓம் சாந்தி

உலகெலாம் இன்ப உருவமாய் வாழ்க.

ஸ்ரீ

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர்காள் !
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய் ! 1

வையத்து வாழ்வீர்காள் ! நாமும் நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்! 2

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந் நெ லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய் ! 3

ஆழி மழைக்கண்ணா! ஒன்று நீ கைகரவேல்
ஆழி யுள்புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்! 4

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்! 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?
பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்! 6

கீசுகீ சென்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?
தேசமுடையாய்! திறவேலோ ரெம்பாவாய்! 7

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம் கோது குலமுடைய
பாவாய் எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவா வென்றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய் ! 8

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே ! மணிக்கதவம் தாள் திறவாய்
மாமீர் ! அவளை யெழுப்பீரோ ? உன்மகள்தான்
ஊமையோ ? அன்றிச் செவிடோ ? அனந்தலோ ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய் ! 9

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் !
மாற்றமும் தாராரோ ? வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டு ஒருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கர்ணனும்
தோற்றும்உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ ?
ஆற்றல் அனந்த லுடையாய் ! அருங்கலமே !
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய் ! 10

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே !
புற்றர வல்குல் புனமயிலே ! போதராய்
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி ! நீ
எற்றுக்கு உறங்கும் பொருளேலோ ரெம்பாவாய் ! 11

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்று பால்சோர
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழ நின் வாசற்கடைபற்றிச்
சினத்தினால்தென் னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய்
இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்!
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்! 12

புள்ளின் வாய்கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைக ளெல்லோரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்! 13

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்! 14

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்போதருகின்றேன்
வல்லை உன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடைமை
எல்லாரும் போந்தாரோ? போந்தார்போந்தெண்ணிக்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க [கொள்
வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்! 15

நாயகனுய் நின்ற நந்தகோ பனுடைய
கோயில் காப்பானே ! கொடித்தோன் றும் தோரண
வாயில் காப்பானே ! மணிக்கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் ! துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னம் முன்னம் மாற்றுதே அம்மா ! நீ
நேயநிலைக் கதவம் நீக்கேலோ ரெம்பாவாய் ! 16

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான் நந்த கோபாலா ! எழுந்திராய் !
கொம்பனுர்க் கெல்லாம் கொழுந்தே ! குலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதாய்! அறிவுருய்
அம்பரமூடறுத் தோங்கி உலகளந்த
உம்பர் கோமானே ! உறங்காது எழுந்திராய்
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய் ! 17

உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்த கோபாலன் மருமகளே ! நப்பின்னுய் !
கந்தம் கமழும் குழலி ! கடைதிறவாய்
வந்துஎங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலி ! உன் மைத்துனன் பேர்பாட
செந்தா மரைக்கையால் சீரார்வளை யொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்! 18

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினுய் ! நீ உன் மணுளனை
எத்தனை போதும் துயிலெழவொட் டாய்காண்
எத்தனையேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோர் எம்பாவாய் ! 19

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே ! துயிலெழாய்
செப்பம்உடையாய் ! திறலுடையாய் ! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா ! துயிலெழாய் !
செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே ! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்து உன்மணாளனை
இப்போதே எம்மை நீராட்டேலோரெம்பாவாய் ! 20

ஏற்றகலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே ! அறிவுறாய்
ஊற்றமுடையாய் ! பெரியாய் ! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே ! துயிலெழாய்
மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன்வாசற்கண்
ஆற்றாது வந்துஉன் அடிபணியு மாபோலே
போற்றி யாம்வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்! 21

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்துதலைப் பெய்தோம்
கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித்யனும் எழுந்தாற்போல்
அங்க ணிரண்டும்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய் ! 22

மாரி மலைமுழஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே நீ பூவைப் பூவண்ணா ! உன்
கோயில்நின்றும் இங்ஙனே போந்தருளி கோப்புடைய
சீரிய சிங்கா சனத்து இருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய் ! 23

அன்று இவ்வுலகம் அளந்தாய்! அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய்! கழல்போற்றி
குன்று குடையா எடுத்தாய்! குணம்போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்று உன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்! 24

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர
தரிக்கிலா னாகித்தான் தீங்குநினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்! 25

மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்து உன்பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையாய் அருளேலோ ரெம்பாவாய்! 26

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூட நெய்பெய்து முழங்கை வழிவார
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்! 27

கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்! 28

சிற்றஞ் சிறுகாலே வந்துஉன்னைச் சேவித்து உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம் மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்! 29

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே [சொன்ன
இங்கு இப்பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர் எம்பாவாய்! 30

**ஆண்டாள் திருவடிகளே சரணம்**

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த

(திருவாசகத்துள்)

# திருவெம்பாவை

**சக்தியை வியந்தது**

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள்வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டுஇங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே! என்னே!
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்! 1

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப் பகல்நாம்
பேசும்போது எப்போது இப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய்? நேரிழையீர்!
சீ சீ! இவையும் சிலவோ? விளையாடி
ஏசும்இடம்ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசுமலர்ப் பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்? யாம்ஆர்? ஏலோர் எம்பாவாய் ! 2

முத்தன்ன வெள்நகையாய்! முன்வந்தெதிர் எழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடை திறவாய்!
பத்துடையீர்! ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்

புத்தடியோம்புன்மைதீர்த்தாட்கொண்டால்பொல்லாதோ ?
எத்தோ? நின் அன்புடைமைஎல்லோம்அறியோமோ?
சித்தம் அழகியார் பாடாரோ? நம்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய் ! 3

ஒள்நித்தில நகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ?
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத்துயின்று அவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்து
எண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய் ! 4

மால்அறியா நான்முகனும் காணா மலையினை நாம்
போல்அறிவோம் என்றுள்ள பொக்கங்களே பேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்!
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே! சிவனே! என்று
ஓலமிடினும் உணராய் உணராய் காண்!
ஏலக்குழலி பரிசேலோர் எம்பாவாய் ! 5

மானே! நீ நென்னலை நாளை வந்துஉங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணாமே
போனதிசை பகராய்? இன்னம் புலர்ந்தின்றோ?
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானே வந்தெம்மைத் தலை அளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய் !
ஊனே உருகாய் உனக்கே உறும் எமக்கும்
ஏனோர்க்குந் தங் கோனைப் பாடேலோர் எம்பாவாய்! 6

அன்னே! இவையும் சிலவோ? பல அமரர்
உன்னற்கு அரியான் ஒருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவன் என்றே வாய்திறப்பாய்!
தென்ஞ என்னுமுன்னம் தீசேர்மெழு கொப்பாய்!
என்னுனே என் அரையன் இன்அமுதென் றெல்லோமும்
சொன்னேம்கேள் வெவ்வேருய்இன்னம்துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்! 7

கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங்கு எங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினேம் கேட்டிலையோ
வாழி ஈதென்ன உறக்கமோ? வாய்திறவாய்!
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாருே?
ஊழி முதல்வனுய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய்! 8

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே
உன்னைப் பிரானுகப் பெற்றஉன் சீர் அடியோம்
உன்அடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்கா [வோம்
அன்னவரே எம்கணவர் ஆவார் அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்! 9

பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே!
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணேரும் மண்ணும் துதித்தாலும்

ஓத உலவா ஒருதோழன் தொண்டர் உளன்
கோதில் குலத்தரன்தன் கோயில் பிணாப்பிள்ளைகாள் !
ஏதவன் ஊர்? ஏதவன் பேர்? ஆர்உற்றார்? ஆர்அயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்! 10

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேர்என்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா! வழி அடியோம் வாழ்ந்தோம்காண்! ஆர் அழல்போல்
செய்யா! வெண்ணீறாடி! செல்வா! சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா!
ஐயா! நீஆட்கொண்டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமல் காப்பாய் எமையேலோர் எம்பாவாய்! 11

ஆர்த்த பிறவித்துயர் கெடநாம் ஆர்த்தாடும்
தீர்த்தன் ! நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தன் ! இவ்வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்து உடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய் ! 12

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கண் மலங்கழுவுவார் வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்குமடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்! 13

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடி
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்! 14

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள் சித்தம் களிகூர
நீர்ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பார்ஒருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி
பேர் அரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும் [யாள்
ஆர்ஒருவர்இவ்வண்ணம்ஆட்கொள்ளும்வித்தகர் தாள்
வார்உருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி
ஏர்உருவப்பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய்!

முன்னிக் கடலைச்சுருக்கி எழுந்து உடையாள்
என்னத் திகழ்ந்து எம்மைஆள் உடையாள்இட்டிடை
மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேல் [யின்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்அருளே
என்னப்பொழியாய்_மழையேலோர் எம்பாவாய்! 16

செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்

செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய்!

அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளி மழுங்கித் தாரகைகள் தாம் அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே ! இப்பூம்புனல்பாய்ந்து ஆடேலோர்
எம்பாவாய் ! 18

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று
அங்கப் பழஞ்சொல் புதுக்கும் எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் ! உனக்கொன் றுரைப்போம்கேள் !
எங்கொங்கை நின் அன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க
கங்குல் பகல் எங்கண் மற்றொன்றும் காணற்க
இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழில் என் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய் !

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றிஎல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றிஎல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம்உய்ய! ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழி நீராடேலோர் எம்பாவாய்! 20

திருச்சிற்றம்பலம்

உ

ஓம்

தத்சத்

சிவமயம் !

பரப்பிரமணே நம:

[சிவா அமிர்தம் ஆத்மஞானம் என்னும் நூலிலுள்ள]

# திரு ஞானப் பாவை

இஃது

தஞ்சை - சென்னை - சூளை - வேப்பேரி

**ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமி**

அவர்களால் அருளியது.

---

ஆனந்த மாகி அழிவிற் பரம் பொருளாய்
தானந்த மில்லாத தற்பரஞ் சோதியதாய்
மோனந்த மான முழுமுதற் பூரணத்தை
ஈனந் தருமுலகிற் பிரிந்துநாம் வந்தேதாம்
ஊனந் தருமுடலை உற்றலைந் தோமினிமேல்
ஞானந் தருநிலையைப் பெற்றே யாடிப்பாடி
வானந் தருமமிர்தப் பேரின்ப வாரிதனில்
ஆனந்த மாகநின் றுடேலோ ரெம்பாவாய். 1

(கருத்துரை).—சத்து சித்து ஆனந்த சொரூபமாய் என்றும் அழிவில்லாத பரம் பொருளாய்-சோதி வடிவமாய் ஆதி காரணமாய்-மாமோன நிலையின் முடிவான-நாமம்-ரூபம்-குணம் குறி முதல் யாது மின்றி எங்கும் நிறைந்து விளங்கக் கூடியபூரண வடிவில் இருந்து நாம் பிரிந்து அபலமும் துன்பமு முற்ற இவ்வுலகில் வந்து மிகவும் இழிவான ஊன் உடலை உற்று உலக வாழ்வு என்னும் மாயை பொருந்திய சொப்பன

வாழ்வில் அகப்பட்டு இருவினையுற்று பல பிறவிகள் எடுத்து துன்புற்றலைந்தோம். இனிமேல் மெய்ஞ்ஞான நிலையைப் பெற்று, தேவாமிர்தம் பொருந்திய பேரின்பக் கடலுள் மூழ்கி ஆனந்த வடிவமாக ஆடிப்பாடி வாழ்வோமாக.

திருப்பாவை பாடித் திருவெம்பா வைபாடி
விருப்புடன் மார்கழிநீ ராடியும் நோன்புற்று
பருப்புடன் நெய்யும் பாலமுதும் பட்சணமும்
நறுமணப் புட்பம் நற்பணிதி பட்டுடையும்
விருப்பிலா நீத்தும் மெலிந்தோர்க்கு அன்னமிட்டும்
திருப்பாடல் பாடிச் சிவனே சிவனேயென்
றுருக்கமாய் ஈசுரனைத் திருமாலை யும்பாடி
அருட்பாடல் பாடிநீ ராடினோ மெம்பாவாய். 2

(க - ரை).—கன்னிப் பெண்களாகிய பரிபக்குவமில்லாத ஆன்மாக்கள், திருப்பாவை, திருவெம்பாவை இரண்டையும் அன்புடன் பாடி மார்கழி நோன்பு நோற்று, நீராடி, நல்ல உணவு, உடை, பணிதிகள் இவைகளில் விருப்பமில்லாமல் நீக்கி, அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னமிட்டு பரஞ் சோதி ஈசுரனையும் மகாவிட்டுணுவையும் அன்பாகப் பாடி நீராடினோம் என்பதாம்.

தத்துவங்க ளத்தனையுந் தான்தேடி யும்தேடி
அத்தனை யும்காணு தப்பாலுக் கப்பாலாய்
சுத்தபரி பூரணமாய்ச் சொல்லரிதாய் நின்றருளும்
அத்தன் பரஞ்சோதி அய்யனை மெய்யன்பால்
பத்தியாய்ப் பாடிநாம் பரமனைக் கேட்டவரம்
சுத்தராய் உள்ளும் புறம்பும் அழகுடைய
உத்தம ராயுன் னன்பரெம் நாயகராய்
அத்தா அருளுக வென்றாடினோ மெம்பாவாய். 3

(க - ரை),—தத்துவங்கள் எல்லாம் தேடித் தேடியும் அவைகளை எல்லாம் கடந்து, அவற்றால் காணப்படாமல்,

எல்லாவற்றிற்கும் மேலானதாகி நிற்கக்கூடிய பூரணமாகி வாக்கினல் சொல்லி விளக்குதற்கும் அரிதாகிய பரஞ்சோதி ஈசுரரைப்பாடி, சுத்த முடையவர்களாய், உள்ளும் புறமும் அழகுடையவர்களாகிய மெய்யன்பர்களாகிய ஞானிகளையே எங்களுக்குக் கணவராகும்படி வரம் அருளுதல் வேண்டும் எனக் கேட்டலாகும்.

பல்லுலகும் பல்லுயிரும் பல்பொரு ளும்பிறவும்
எல்லாமும் தான்படைத் தேகாத் தியக்கியருள்
வல்லானை ஈசுரனை நாம்பாடிக் கேட்டவரம்
நல்ல மழைபெய்தும் நானிலமெல் லாம்செழித்து
நெல்லும் கரும்பும் நேர்த்தியாய் வாழைமுதல்
எல்லா வகையும் விளைந்தே மலிவுற்று
செல்வமும் பசுவும் நிறைந்தின் பாயுலகம்
அல்லல் அறவேஎன் ருடிடுனே மெம்பாவாய். 4

(க - ரை).—எல்லா உலகங்களையும், உயிர்களையும் மற்றெல்லாவற்றையும் படைத்துக் காத்து இயக்கி சேர்த்து அருள் செய்ய வல்ல ஈசுரனை நாம் பாடி, உலகில் நல்ல மழை பெய்து எங்கும் செழிப்புற்று நெல், கரும்பு, வாழை நவதானியம் முதலிய எல்லாப் பொருள்களும் நிறைய விளைந்து, நலம் பெருகி, நல்ல செல்வமும் பசுக்கூட்டங்களும் நாடெங்கும் மலிந்து, எங்கும் துன்பங்கள் அடியோடு நீங்கி எல்லோரும் இன்பமாய் வாழ வரம் கேட்டலாகும்.

அன்னையாய்த் தந்தை அரியகுரு வாயிறையாய்
உன்னத மாய்நின் றுயர்தஞ்சை வில்வவனம்
மன்னும் பரஞ்சோதி ஈசுரனை யார்பாடி
என்னென்ன கேட்டாலும் தந்தருள் சோதியைநாம்
கன்னிப்பெண் ணுயிருந்த காலத்தே நாம்பாடி
என்ன வரம்வேண்டிக் கேட்டோமோ அத்தனையும்
நன்னய மாயெல்லாம் நற்பருவ முற்றவுடன்
அன்பா யளித்தாரென் ருடேலோ ரெம்பாவாய். 5

(க - ரை).—எல்லா ஆன்ம கோடிகளுக்கும் அன்னையும், தந்தையும், குருவும் கடவுளுமாய் இருக்கக் கூடிய தஞ்சை யம்பதி என்னும் வில்வவனத்தில் எழுந்தருளியுள்ள பரஞ் சோதி ஈசுவரரை யார் பாடி என்ன கேட்டாலும் கொடுத் தருளும் பரம்பொருளைக் கன்னிப் பெண்கள் பருவமுறாத காலத்தில் பாடிக் கேட்ட வரங்களை யெல்லாம் தக்க பருவம் வந்தவுடன் மிகுந்தஅன்போடும் தந்தாரென்று அவ்வரங்களை யடைந்து ஆடிப்பாடிக் களிப்போமாக.

சுத்தப் பரவெளியாய்த் தூயபரஞ் சோதியதாய்
நித்தியா னந்தமாய் நின்றபரி பூரணத்துள்
சத்தி யெனுஞ்செயல் சேர்ந்துசங் கல்பமதால்
சத்தியும் சிவமாய் நின்றருளித் தம்செயலால்
முத்தொழில் செய்தற்கே மூவுருவ மாய்நின்றும்
பத்தியும் ஞானப் பாவைநோன் புமளித்து
சுத்தராம் ஞான புருடரு மின்பளித்தான்
சித்திரை நீராடிப் பாடேலோ ரெம்பாவாய். 6

(க - ரை).—தூய பரவெளியாயும், பரஞ்சோதியாயும், அழியாத ஆனந்த வடிவாயும், பூரணமாயும் விளங்கக் கூடிய கடவுள் சொரூபத்தில் சத்தியாகிய செயல் சேர்ந்து சங்கல் பத்தினுல் சத்தி சிவமாய் நின்று, தம் செயலால் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் செய் வதற்காக மூன்று உருவமாய் இருந்தும், நமக்குப் பத்தியை யும், ஞானப்பாவை நோன்பையும், ஞானப் புருடர்களையும் பேரின்ப போகத்தையும் அளித்தார் என்று ஆடிப்பாடி சித்திரை நோன்புற்று நீராடிக் களிப்போம் என்பதாம்.

ஈனப் புருடர்களும் இவ்வுலகப் போகமற்று
ஞானப் புருடர்களை நாமெல்லோ ரும்சேர்ந்து
வானத் திருஅமுதை வாரிவா ரியுண்டும்
ஆனந்தப் போகமுற் றானந்த மேஉருவாய்

ஆனந்த மாக்கடலில் ஆழ்ந்திட வேவீழ்ந்தும்
தானந்த மாய்மூழ்கித் தவழ்ந்தும் விளையாடி
தானந்தந் தானன வென்றேயா டிப்பாடி
ஆனந்த மாகநின் றுடேலோ ரெம்பாவாய். 7

(க - ரை).—அஞ்ஞானமாகிய மாயையையும், அதற் குரிய இவ்வுலக போகத்தையும் நீத்து மெய்யன்பர்களாகிய ஞானிகளை நாம் கணவர்களாக அடைந்து, தேவாமுதத்தை நிறைய உண்டு, பேரின்ப போகமுற்று ஆனந்தமே வடிவாய் பேரின்பக் கடலில் மூழ்கி, அந்த ஆனந்தக் கடலுள் தவழ்ந் தும் விளையாடியும் தானென்னும் தன்மையுமற்று ஆடியும் பாடியும் என்றும் தென்புடன் இருப்போமாக.

வானத் திருவமுதை எல்லோரு மாயுண்டு
மோனச் சுகவீட்டுள் மூவர்ணப் பஞ்சணைமேல்
ஞானப் புருடர்களை நழுவாமல் தாமணைத்து
ஆனந்தப் போகமுற் றயர்ந்துந் துயின்றீரோ
வானம் வெளுத்திற்று வான்கோழி கூவிற்று
ஈன முறுஇரவும் எல்லாம் ஒழிந்திற்று
பானுவாம் சூரியனும் உதித்தா னெழுந்தெல்லாம்
ஞானச்சித் திரைநீ ராடேலோ ரெம்பாவாய். 8

(க - ரை).—ஞானப் புருடர்களுடன் எல்லோரும் தேவா முதத்தை உண்டு மோன வீட்டுள் முக்குணத்தோடுங் கூடிய ஐம்புலன்களாகிய பஞ்சணை மெத்தையின் மேல் படுத்து ஞானப்புருடர்களை விடாது அணைத்து பேரின்ப போகத்தை அனுபவித்து அயர்ந்து நித்திரை செய்கிறீர்களோ! வானம் வெளுத்தது. கோழியும் கூவிற்று. அஞ்ஞானமாகிய இருள் நிறைந்த இரவும் நீங்கிவிட்டது. ஞான சூரியனும் உதய மாயினன். எல்லோரும் எழுந்திருந்து ஞானத்தோடு கூடிய சித்திரை நோன்பு நோற்று நீராடிப் பாடி ஆனந்தமாக வாழ்வோமாக.

தந்தைதாய் வீட்டுள் தனையர்களை யேமாற்றி
விந்தையாய் மறைந்தும் விளையாடல் செய்வார்போல்
அந்தமா யெவ்வுயிர்க்கு மன்னை தந்தையான
சொந்தன் ஆனந்தன் தூயன் பரஞ்சோதி
பந்த முறுமுடலுள் பார்க்கா மறைந்து நமை
சிந்தை மயங்கித் தேடச்செய் தங்கிங்கும்
அந்தமாய்க் காட்சிதந் தானந்தப் போகமதைத்
தந்த பெருமானைப் பாடேலோ ரெம்பாவாய். 9

(க - ரை).—தாய் தந்தையர்கள் வீட்டிற்குள் தெரியாது மறைந்துகொண்டு குழந்தைகளைத் தேடி அழுது வருந்தச் செய்து விளையாடல் பார்த்துப் பின்பு முன் வந்து இன்பம் அளிப்பதுபோல் சர்வ உயிர்களுக்கும் தாய் தந்தையும் சொந்தமும், இன்ப வடிவமும் பரிசுத்தமுமான பரஞ்சோதி ஈசுரனும், உடலுக்குள் மறைந்திருந்து, நாம் சிந்தை மயங்கி இறைவன் அங்கே இருக்கிறுன், இங்கே இருக்கிறுன் என்று தேடி யலையும்படிச் செய்து, விளையாடல் பார்த்துப் பின்பு தெரிசனம் தந்து பேரின்ப போகத்தை அளிக்கும் சிவபெருமானை இன்புடன் பாடுவோமாக.

முன்னைப் பரம்பொருளைச் சோதியைநாம் பாடுதற்கு
என்னநாம் பேசி இருந்துந் துயின்றாயழகோ
இன்னொளிச் சூரியனு முதித்தா னிருள்நீங்கி
மின்னொளி மாதரெலாம் வந்தோம் கடைதிறவாய்
அன்னமே கிளியே குயிலும் மயில்போன்றும்
பொன்னே அனையப் பூம்தூயச் சோதரிகாள்
என்னை யுறும்ஞான இன்பசுக நிலையில்
தன்னை மறந்தும் இருந்தேலோ ரெம்பாவாய். 10

(க - ரை) —ஆதியாயும், மேலான வஸ்துவாயும் சர்வ காரணமாயுமுள்ள பரஞ்சோதி ஈசுரனை நாமெல்லோரும் நாளைக் காலையில் எழுந்து நீராடிப் பாட வேண்டு மென்று நேற்று நாம் பேசியிருந்தும் இன்னும் நித்திரைசெய்

கின்றுயே. இது அழகா? ஞான சூரியன் உதித்தான். இருள் நீங்கிவிட்டது. எழுந்து கதவைத்திற என்று கூற அதற்கு அந்தப்பெண் அன்னத்தைப்போன்ற நடையும், தூய்மையும், பகுத்துண்ணும் தன்மையும் உடையவரும் கிளி போன்ற அழகும், பசுமை நிறமும், கொஞ்சுந் தன்மையும் உடையவரும், மயில் போன்ற சாயலையும், மிகுந்த அழகும் எல்லோரும் விரும்பக்கூடிய தன்மை யுடையவரும், குயில் போன்ற இனிய குரலுடன் பாடக் கூடியவரும், பரிபக்குவம் வந்தபோது தன் இனத்தைத் தேடி யறிந்து அடையக் கூடியவரும் பொன்னைப் போன்ற மேனியை உடையவரும், புட்பத்தைப் போன்ற மெல்லிய தன்மையும் சுத்தமான உள்ளமுடையவருமாகிய சகோதரிகளே, என்னைச் சேர்ந்துள்ள ஞானத்தினுடைய இன்ப சுகபோக நிலையில் என்னையும் மறந்து இருந்துவிட்டேன். நான் நித்திரை செய்யவில்லை என்று அறிவீர்களாக.

ஞானப் புருடர்களே நாம்தின மும்கூடி
ஆனந்த மாகவிளை யாடியும் பாடியும்நாம்
மோனச் சுகவீட்டுள் இன்பாய்த் துயில்வதனை
ஈனப் புருடர்களும் இவ்வுலகக் கண்ணியரும்
தான்கண் டிகழ்ந்தும் நகையாடு வாரென்றே
நாணமே எனக்குள் ளிருக்குதென் சோதரிகாள்
ஏனோதா னுந்தனுக் கின்னுமிக் கற்பனைகள்
தானற வேவிடுத் தாடேலோ ரெம்பாவாய். 11

(க - ரை).—மெய்ஞ்ஞானமாகிய புருடர்களே நாம் எப்பொழுதும் பிரியாமல் சேர்ந்து ஆனந்தமாக ஆடியும் பாடியும் சிரித்தும் மாமௌனமாகிய பரமசுக வீட்டுள் ஆனந்தமாக நித்திரை செய்வதையும் அஞ்ஞானப் புருடர்களும் பரிபக்குவமில்லாத கன்னிப்பெண்களும் நம்மைக்கண்டு இகழ்ந்து பரிகாசமாகச் சிரிப்பாரோ என்று என் மனத்துள் நாணமிருக்கிறது என்கிறாள் ஒரு பெண். ஏன் உனக்கு இன்னும் இந்தக் கற்பனை இருக்கிறது ; ''அறவே ஒழித்து விடு'' என்று மற்ற பெண்கள் சொல்லுகிறார்கள்.

இன்ப ங்றைகடலில் எல்லோரும் தாம்வீழ்ந்து
அன்பாக வேழுழ்கி ஆடியும் பாடிநிற்க
தென்பாக நம்கணவர் போலச் சிலஅலைகள்
அன்பாக ஓடிவந் தாவிப் பிடித்துநமை
இன்பாக முத்தமிட் டிழுத்தும் விளையாடல்
என்சொல்வோ மின்பசுகம் என்சொல்வார் நம்கணவர்
உம்பரும் தாம்பெறு தொப்பிலா திப்போகம்
தென்பா யடைந்தோமென் றூடேலோ ரெம்பாவாய். 12

(க - ரை).—பேரின்பக் கடலுள் எல்லோரும் வீழ்ந்து ஆடியும் பாடியும் நிற்கும்பொழுது அலைகளானது நம்கணவர்களைப்போல திடமாக ஓடிவந்து நம்மைத் தாவிப் பிடித்தும் இன்பமாக முத்தமிட்டும் அப்படியும் இப்படியும் இழுத்து விளையாடுவது என்ன ஆனந்த சுகமாக இருக்கிறது. நம் கணவர்கள் இதைப் பார்த்து என்ன சொல்லுவார்களோ என்கிறாள் ஒருத்தி. மற்ற பெண்கள் அதை மறுத்து தேவர்களும் அடைய முடியாத ஒப்பற்ற இப்போகத்தை நாம் அடைந்தோமென்று ஆடிப்பாடுவோமென்கிறார்கள். (உம்பர் = தேவர்)

அம்பரத்துள் எம்பரமா யப்பாலுக் கப்பாலாய்
தம்பரத்துள் அண்டமெலாம் அளித்தும் பரவெளியுள்
பம்பரத்தைப் போற்சுழல வைத்து மிகஅரிதாய்
நம்பரத்துள் சித்வெளியுள் பேரின்ப மாய்நடிக்கும்
எம்பெருமான் காட்சிதனைக் கண்டோநாம் இன்புருவாய்
அம்பரமும் நம்பரமாய் அவ்வுருவே நம்முருவாய்
இம்பரத்தில் நாமெல்லாம் பேரின்ப மாய்நின்றே
பம்பரத்தைப் போலவுநா மாடேலோ ரெம்பாவாய். 13

(க - ரை)—ஆதிகாரணமாகிய அகண்டாகார வெளிக்கும் அப்பாலாய் தம் சுயவெளியாகிய வடிவில் சர்வ அண்ட பிண்ட சராசரங்களையும் படைத்து அவைகளைத் தம்சொரூபமாகிய பரவெளியினிடத்தே பம்பரத்தைப்போல் சுழன்று

கொண்டு நிற்கும்படியாக மிக அற்புதமாக வைத்தும் சர்வ ஆன்மகோடிகளிடத்துள் சிற்சபையாகிய அறிவினுள் வெளியுள் ஆனந்த உருவமாகத் தாண்டவம் செய்து நிற்கக் கூடிய காட்சியைக் கண்டு நாம் எல்லோரும் அந்த ஆனந்த வடிவமுற்று அவ்வுருவமே நம்முருவாக அத்துவிதமுற்றோ மென்று சுழன்று ஆடுவோம் பாடுவோம் என்பதாம்.

சீர் கொண்டதேவர் திருமாலும் நான்முகனும்
பார்கொண்ட சித்தரு முத்தருமற் றெல்லோரும்
நீர்கொண்டு மலர்கொண்டும் நித்தம்பூ சித்தீசன்
பேர்கொண்டும்புகழ்பாடித்தவஞ்செய்தும்தியானித்தும்
கார்கொண்ட குகையுற்றும் பெற்றார்நம் போலெளிதாய்
யார்கண்டார் யார் பெற்றார் அம்மா ஈதோமுன்னம்
சார்கின்ற செய்தவத்தாற் பெற்றோமென் றேஈசன்
பேர்கொண்டே பாடியுநாம் ஆடேலோ ரெம்பாவாய். 14

(க - ரை).—பெருமை பொருந்திய தேவர்களும் விட்ணு பிரமா முதலியவர்களும் உலகிலுள்ள சித்தர் முத்தர் முனிவர்கள் முதல் எல்லோரும் ஈசுரனை அபிடேகம் செய்தும் மலர்களால் அர்ச்சித்துப் பாடியும், உருகியும், செபம், தபம், தியானம், யோகம் முதலியன செய்தும் இருள் நிறைந்த குகை, காடு முதலியதை உற்றும் பெற்றார்கள். நம்போல ஈசுரனைச் சுலபமாக யார் பெற்றார்கள் என்கிறாள் ஒரு பெண். மற்ற பெண் நாம் முன் செய்த தவத்தினால் பெற்றோ மென்கிறாள் என்பதாம்.

அகத்துள் தனமும் அறிய விழியிருந்தும்
சகத்திற் பணந்தேடி அலையும் தரித்திரன்போல்
மகத்துறும் பேரின்பும் அறிவும்நம் முள்ளிருந்தும்
இகத்தி லிதையறியா யின்பத்திற் கேயலைந்தோம்
சுகத்தை அறியாதும் துன்புற்றோம் பாரேடி
உகந்தும் பரமன் உண்மை தனையுணர்த்தி
இகத்தும் பரத்திற்பே ரின்பமாய் நாம்வாழ்க
செகத்தில் அளித்தானைப் பாடேலோ ரெம்பாவாய். 15

(க - ரை).—வீட்டுக்குள் தனப்புதையலும் அதை அறியக்கூடிய இரண்டு கண்களும் இருந்தும் அறியாது பணத்திற்காக பலவித கஷ்டப்பட்டு அலையும் வறியோனைப்போல நம்முள் பேரின்பமும் மெய்யுணர்வும் இருந்தும் அதை அறியாது இன்ப சுகத்திற்காக அலைந்தோம் பார்த்தாயா என்கிருள் ஒரு பெண். மற்றவர்கள் ஈசுவரன் கருணை வைத்து நமக்கு உண்மையை உணர்த்தி இகத்திலும் பரத்திலும் பேரின்ப போகத்தில் வாழவைத்த இறைவனைப் பாடுவோமாக என்கிருர்கள்.

எங்கும் நிறைந்தே விளங்கும் பரஞ்சோதி
மங்களப் பருவம் அறிந்தோம் எல்லோர்க்கும்
மங்களப் பேறும் பேரின்ப போகமதும்
சங்கையில் லாமல் அளித்தா னதைப்பெற்ருேம்
பொங்கும் பரசுக போகத்தில் மூழ்கிேனும்
கங்குல் பகல்காணும் காலம்கற் பனைகாணும்
எங்கும் பரவெளியாய் எல்லாமும் நம்முருவாய்
மங்கள மாய்நின்றே ஆடேலோ ரெம்பாவாய். 16

(க - ரை ).—எல்லா அண்டங்களிலும் உள்ளும் புறமும் பூரணமாக நிறைந்து விளங்கக்கூடிய மேலான சோதியாகிய ஈசுரன் நமக்குத் திருமணப் பருவம் வரவும் திருமணமும் பேரின்ப சுகபோகமும் சந்தேகமில்லாமல் அளிக்க நாம் பெற்று அதில் மூழ்கினேம். இரவு பகல் தெரியவில்லை. இவ்வுலகமும் காலமும், கற்பனையும் தோன்றவில்லை. எங்கினும் வெளியாகவும் நம்முருவமாகவும் கண்டோம் என்றும் மங்களமாக ஆடி நிற்போம் என்கிருர்கள்.

(நம் உருவம் = நம் சுயவடிவம்)

அந்தமிலா இன்பநமக் களித்த பரஞ்சோதி
எந்தஊர் எத்தேசம் எக்குலம் எவரென்பர்
தந்தையார் தாயார் சகோதரரார் தன்மை என்ன
சொந்தமார் செல்வமெது செயலென்னே சொல்லேடி

அந்தரங்க மெல்லாம்கேட் டறிந்தோ மிகவிந்தை
தந்தையிலை தாயுமிலை ஏதுமிலா அனுதியராம்
பந்தமிலா எவ்வுலகும் படைத்துக்காத் தேசேர்க்கும்
அந்தமிலாச் சோதியிதென் ருடேலோ ரெம்பாவாய். 17

(க - ரை).—முடிவு இல்லாத ஆனந்த சுகபோகத்தை நமக்கு அளித்த மேலான சோதியாகிய ஈசுரனுக்கு ஊர் எது நாடு எது சாதி என்ன சிநேகிதர் யார் நிலைமை என்ன பந்துக்கள் யார் ; பொருள் பொன் இருக்கிறதா, சக்தி என்ன கூறுவாயாக என்று ஒரு பெண் கேட்கிருள். மற்றவர்கள் இந்த இரகசியத்தையெல்லாம் கேட்டுத் தெரிந்தோம். மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. எல்லா உலகங்களையும் பற்று இல்லாமல் படைத்து, காத்து சேர்ப்பவராம். அந்தமிலாச் சோதியிது என்கிருர்கள்.

அம்மா ஈதென் ஆனந்தம் என்னேடி
சும்மா இருந்தாலும் தூக்குதே பேரின்பம்
நம்மை யறியாமற் பொங்கிநாம் ஆடிநிற்க
இம்மா நிலத்தோர்கண் டெல்லா மதிசயிக்க
கைம்மா றில்லாநமக் கேனே இதையளித்தான்
பெம்மான் பரமன் பேரின்பன் தஞ்சைவளர்
எம்மான் பரஞ்சோதி ஈசன் எல் லாமருளும்
அம்மானைப் பாடிநாம் ஆடேலோ ரெம்பாவாய். 18

(க - ரை).—அம்மா இது என்ன இன்பம்! சும்மா இருந்தாலும் நம்மை மேலே தூக்குகிறது. நம்மையும் அறியாமல் பொங்கி எழுந்து பாடி ஆடச் செய்கிறது. இதை இவ்வுலக மாந்தர்கள் கண்டு வியப்புறவும் பிரதிப் பிரயோசனம் கருதாது நமக்கு இதை ஏன் அளித்தான். பாண்டிய நாட்டில் வில்வவன க்ஷேத்திரமாகிய தஞ்சையம்பதியில் எழுந்தருளியிராநின்றவனும் எல்லாம் அளிக்கக் கூடியவனுமான பரஞ்சோதி ஈசுவரன் அவனைத் தினமும் பாடி நீர் ஆடுவோமாக.

கற்பனைகள் எல்லாம் கடந்துநம் மெய்யுணர்வால்
அற்புதமா மெய்ப்பொருளை அடைந்தந் நிலைநின்றோம்
தற்பரமாம் அப்பொருளே தாமாகக் கண்டவுடன்
பற்பலவாய் வெவ்வேறாய் அது இதுவாய்க் கண்டதெ [லாம்
சொற்பனம் போலெல்லாம் காணேமி தென்னேடி
சிற்பரமாய் சித்துருவாய் எவ்வுருவும் நம்முருவாய்
தற்பரமாய் பேரின்பத் தாண்டவஞ்செய் தேபாடி
அற்புதமாய் நின்றேநாம் ஆடேலோ ரெம்பாவாய். 19

(க - ரை),—இவ்வுலகப் பொய்மைகளை எல்லாம் நம் மெய்யறிவினாலே கடந்து அந்நிலை நின்று அப்பொருளே நம் சொரூபமாக அறிந்தவுடன் பலவிதமாகவும் பேதாபேத மாகவும் வெவ்வேறாகவும் பார்த்ததெல்லாம் கனவுபோல் காணேமே என்கிறாள் ஒரு பெண். மற்றவர்கள் நாமெல்லோரும் அறிவானந்த சொரூபமாகப் பெற்றோம். ஆனந்தக் கடலில் மூழ்கி ஆச்சரியமாக ஆடுவோமாக.

ஏற்றிப் பணியவும்நாம் இன்பசுகம் தந்தசிவன்
ஆற்றல் அணியும் அவர்பெருமை என்னேடி
கூற்றை உதைத்தான் கொடியமா நஞ்சுண்டான்
ஆற்றல் படைத்த அசுரர் புரமூன்றும்
சீற்றமில் லாது சிரித்தே எரித்தான் வெண்
நீற்றைக் கரியுரியைச் சூலத்தை மான்மழுவை
ஆற்றையும் வில்வறுகை அணிந்தான் பெருவள்ளல்
போற்றி நாம்பாடி ஆடேலோ ரெம்பாவாய். 20

(க - ரை) —நாமெல்லாம் அன்பு பக்தியுடன் ஏற்றி பாடி வணங்கவும் ஆனந்தப் போகத்தை அளித்த ஈசுவரனின் சக்தி என்ன அணியக்கூடிய பணிதிகள் என்ன பெருமை என்ன என்கிறாள் ஒரு பெண். எமனை உதைத்தான். ஆலகால விடத்தை உண்டான். கோபமில்லாது சிரித்தே புர மூன்றையும் அழித்தான். திருநீற்றையும், மான்மழுவையும், கங்கையும் வில்வத்தையும், அணிந்தான். கற்பகத் தருவைப்

போன்று கேட்டதெல்லாம் அளிக்கக்கூடிய ஈசுரனைப் போற்றிப் பாடுவோமாக.

அண்டங்கள் பல்கோடி அளித்தும் அவையெல்லாம்
கொண்டேதாம்தம்முருவில்வைத்தந்த அண்டமெல்லாம்
எண்டிசையு மைம்பூதம் இரவிமதி இருளாய்
உண்டியும் தாவரமாய் ஒப்பில் கடல்மலையாய்
பிண்டம் உடலுயிராய் அன்பாய் உளமுணர்வாய்
கண்டிடா தேஇதனுள் நின்றேதாம் காத்தருளும்
அண்டர்பிரான் நம்பெருமான் அற்புதமு மென்னேடி
கண்டோமிவ் வுண்மையென் றுடேலோ ரெம்பாவாய்.

(க - ரை).—பலகோடி அண்டங்களையும் அளித்து அவைகளை எல்லாம் தம் வடிவுள் நிற்கும்படிச் செய்துஅந்த அண்டமெல்லாம் எட்டுத் திசைகளும் ஐந்து பூதங்களும் கடல் மலையும் உடல் உயிராயும், உளம், அன்பு, உணர்வு முதலியதாகவும் நின்று, யாரும் அறியாதபடி ஒவ்வொன்றிலும் கலந்து நின்று காத்தருளக்கூடிய ஈசுரனின் அற்புதம் பார்த்தாயா என்றாள் ஒரு பெண். இந்த உண்மையான இரகசியத்தை நாம் இப்போது தெரிந்தோமென்று ஆடிப்பாடுவோமாக என்பதாம்.

அகத்தும் புறத்துநமக் கானந்தப் பேரளித்த
மகத்துறும் எம்பெருமான் விளையாடல் பாரேடி
சகத்திற் பதுமைகளைத் தான்செய் தேமறைவாய்
இகத்திற் கயிற்கொண்டே ஆட்டுவிப் பான்போல
செகத்தை உடலுயிரை அளித்துமா யைமறைவில்
அகத்துட னிச்சையினு லாட்டிவைத் தேஈசன்
சகத்துயிர்க ளாடுவதாய் வைத்துவிளை யாடல்செய்யும்
மகத்துவம் கண்டோமென் றுடேலோ ரெம்பாவாய். 22

(க - ரை).—உள்ளும் புறமும நமக்கு இன்பசுக போகத்தை அளித்த பரஞ்சோதிப் பெருமானின் விளையாடல் பார்த்தாயா. உலகில் மாந்தர்கள் பலவிதமான

பொம்மைகளைச் செய்து, திரைமறைவில் நின்று ஆட்டுகிறவன்போல் ஈசுவரனும் எல்லா உலகம், உடல், உயிர்களையும் அளித்து மாயை மறைவில் நின்று இச்சையினுல் ஆட்டி வைத்தும் உயிர்களே ஆடுவதாக ஏமாற்றி வைத்திருக்கிருன் பார்த்தீர்களா என்கிருள் ஒரு பெண். இந்த அற்புதத்தை இப்பொழுது அறிந்தோமென்று ஆடிப் பாடுவோ மென்கிருர்கள் மற்றப் பெண்கள்.

அம்பரத்தி லின்புருவாய் ஆனந்த மாய்நடிக்கும்
எம்பெருமான்காட்சியைக்கண் டின்புருவாய்ஆடிநிற்கும்
நம்போல இவ்வுலகும் நாடியுமக் காட் சிகண்டும்
எம்மதமும் எக்குலமும் எவ்வுயிரும் எல்லாமும்
சம்மதமாய் இவ்வுலகப் பொய்மைகளைத் தான்கடந்து
தம்மயமாய்ச் சித்துருவாய் தாமதுவே றென்பதற்று
நம்மயமாய்ப் பேரின்பாய் எல்லாமொன் ருய்க்கூடி
உம்பரும்கண் டேவியக்க ஆடேலோ ரெம்பாவாய். 23

(க - ரை):—சிற்பர வெளியில் ஆனந்த வடிவமாய் தாண்டவம் செய்யக்கூடிய ஈசனின் காட்சியைக் கண்டு ஆனந்த வடிவமாய் ஆடி நிற்கக்கூடிய நம்மைப்போன்று இவ்வுலகிலுள்ள எல்லா ஆன்மாக்களும் இந்த காட்சியைக் கண்டு இவ்வுலகத் தன்மைகளை எல்லாம் நீத்து அதுவே தாளுய் சித்துருவாய் ஆனந்த வடிவமாய் தேவர்களும் கண்டு வியக்கும்படி எல்லோரும் பேரின்பக் கடலில் வீழ்ந்து ஆடிப்பாடி விளையாடுவோ மென்பதாம்.

அகக்கண் புறக்கண் ணிருந்தகப் புறஇருளை
உகந்து மதைநீக்கி உள்ளபொருள் தானறிய
அகத்தும் புறத்தொளியும் வேண்டுவது போல்நமக்கு
மகத்துறும் சூரியன்க ளிரண்டும் உதித்தும்பின்
இகத்தினிற் பெண்களைப்போ லினுந்துயின்றீ ரேஎழுவீர்
முகத்துறும் கண்கொண்டே பார்த்திரோ நீங்களெமை
சுகத்திற் பெரியசுகப் பேரின்ப நித்திரையில்
உகந்து மிருந்தோமென் ருடேலோ ரெம்பாவாய். 24

(க - ரை).—அகக் கண்ணுகிய அறிவும் புறக்கண்ணுகிய ஊனக்கண்ணும் இருந்தும் அகம் புற இருளை நீக்கி உள்ள பொருள்களைப் பார்ப்பதற்கு ஞான ஒளியும், சூரிய ஒளியும் வேண்டியதுபோல பெருமை பொருந்திய சூரியன்கள் இரண்டும் உதித்தும் இன்னும் உலகத்தன்மையுற்ற அஞ்ஞானப் பெண்களைப்போல நித்திரை செய்கிறீர்களே.எழுந்து வாருங்கள் என்கிருர்கள். அதற்கு இந்தப் பெண்கள் நீங்கள் ஊனக் கண்ணுல் பார்த்து உருவமும் நித்திரை செய்பவராகவும் கண்டீர்கள். சுகத்திற் பெரிய சுகமாகிய பேரின்ப சுகபோக நித்திரையில் நாங்கள் இருப்பதை நீங்கள் அறியவில்லை. ஞானக் கண்ணுல் பாருங்கள் உண்மை விளங்கும் என்பதாம்.

அந்தமிலா ஆனந்தன் அமிர்தன் பரஞ்சோதி
தந்தமெய்ஞ் ஞானப் புருடருடன் நாமெல்லாம்
இந்தஉல கஉயிரும் அமுதுண்டே இன்புருவாய்
சந்ததம் பேரின்ப சாகரத்தி லேமூழ்கி
விந்தையாய்ப் பாடி விளையாடி நின்றிடவும்
அந்தகன் மாலும் அரன்வேத னும்காமன்
பந்தமும் மாயை வினையும் தொழிலற்று
அந்த முறவேநா மாடேலோ ரெம்பாவாய். 25

(க - ரை).—முடிவில்லாதவனும் ஆனந்தனும் அமிர்த வடிவனுமான தஞ்சைப் பரஞ்சோதி ஈசுவரனளித்த ஞானப் புருடர்களும் இவ்வுலகில் எல்லா ஆன்மாக்களும் நாமெல்லோரும் சேர்ந்து தேவா அமிர்தத்தை உண்டு ஆனந்த வடிவமாய் பேரின்ப சாகரத்தில் மூழ்கி ஆடிப்பாடி என்றும் நிற்கவும் அயன், அரி, அரன், எமன், காமன் முதலியவர்களும் பந்தம், மாயை, வினை முதலியவைகளும் தங்களுக்கு வேலை இல்லாமல் சும்மா இருந்து வருந்தி முடிவடையும்படியாக ஆடுவோமாக.

வான்காணு மூவர்களும் காணுப் பொருளினைநாம்
தான்காண்போ மென்றென்றே தத்துவங் கள்பேசி
ஊன்வாய் உலராமல் உள்நோக்கிச் சிந்திக்க
தேனுய் அமுதாய் கனியுமாய்த் தித்தித்தும்

ஊனுய் உயிராய் உணர்வாகி உள்ளொளியாய்
ஞானமாய் இன்பாய் நாமதுவும் வேறின்றி
தானுய் நமைவைத்த அற்புதமும் பாரேடி
தானென்ப தற்றேமென் ருடேலோ ரெம்பாவாய். 26

(க - ரை).—ஆகாயம் முதலாக ஐம்பூதங்களும், பிரமா, விட்ணு, ருத்திரன் முதலாக தேவர்கள் முதலியவர்களும், பார்க்க முடியாத பொருளை நாம் பார்ப்போமென்று தத்துவங்களைப் பேசி வாய் உலர்ந்து வீணுள் கழிக்காமல், நாம் நம் அகத்துள் நோக்கித் தியானம் செய்தோம்; தேனுகவும், அமிர்தமாகவும், கனியாகவும் தித்தித்தும் ஊன் உயிர் உணர்வாகவும், உள் பிரகாசமாகவும், ஞானமாகவும், இன்பமாகவும், அதுவே தாஞகவும் விளங்கச் செய்த அற்புதத்தைப் பார்த்தாயா என்கிருள் ஒரு பெண். மற்ற பெண்கள் தானென்ற தன்மையை அற்றேமென்று ஆடுவோமாக என்கிருர்கள்.

துன்பத்தை ஆற்றுத் துடித்தோம்நாம் இப்பொழுது
இன்பத்தை ஆற்றுகிலோ மென்செய்வோ மின்பத்தால்
தெம்பா யாடிப்பாடிச் சிரித்தும் விளையாடி
அன்பாக வேபல அற்புதக் காட்சியுங்கண்
டின்னமு துண்டோம் இன்பத்துயில் கொண்டோம்
என்னென்ன போகம் எல்லாம் அனுபவித்தோம்
உம்பரின் மாதர் உமையும் திருகலையும்
இன்பாய் வியக்கநின் ருடேலோ ரெம்பாவாய். 27

(க - ரை).—முன்பு நாம் எல்லாம் துக்கத்தைப் பொறுக்க முடியாது வருந்தினேம். இப்பொழுது ஆனந்தத்தைப் பொறுக்க முடியாது, ஆடிப்பாடி சிரித்தும் விளையாடியும் பல ஆச்சரியமான காட்சிகளைப் பார்த்தும் அமிர்தத்தை உண்டும் மற்ற எல்லாப் போகங்களையும் அனுபவித்தோம்.

தேவலோக பெண்களும் சக்தி, லட்சுமி, சரஸ்வதி முதலிய வர்களும் அதிசயிக்கும்படி ஆடுவோமாக என்பதாம்.

அன்னமும் குயிலுங் கிளியும் மயில்போன்றும்
மின்னலும் பொன்போன்ற மாதரெலாம் வந்தீரோ
கன்னியராய் நாமிருந்த காலத்தில் ஈசுரனை
என்னவரம் கேட்டோமோ எல்லா மடைந்துற்றோம்
இன்னமும் வேண்டியதும் கேட்பதும் யாதற்றோம்
நன்னயமா யிவ்வுலகப் பெண்களையும் நாம்சேர்த்துப்
பன்னுளும் இன்புருவாய்ப் பரஞ்சோதி ஈசுரனை
உன்னதமாய்ப் பாடிநா மாடேலோ ரெம்பாவாய். 28

(க - ரை).—அன்னத்தைப் போன்று நடையும் தூய உருவும் பகுத்துணர்ந்தும் பிரித்து உண்ணும் தன்மையை உடையவளும், குயிலைப்போன்று தொனியும் பருவம் வந்ததும் தம் இனம் அறிந்து சேரும் தன்மையை உடையவர்களும் கிளியைப்போன்ற அழகும் மயிலைப்போன்று சாயலையும்' அழகும் உடையவளும், பொன்னையும் மின்னலைப் போன்ற நிறத்தையும் உடைய பெண்களெல்லாம் வந்தீர்களா? நாம் அடையக்கூடிய பேரின்ப சுகத்தை எல்லோரும் அடைந்துற்றோம். இனி வேண்டியதும் கேட்பது மற்றோம்.இவ்வுலகப் பெண்கள் எல்லோரையும் சேர்த்து என்னுளும் ஈசுரனைப் பாடி ஆடி என்றும் வாழ்வோமாக என்பதாம்.

அந்தமிலா தஞ்சைவளர் ஆதிபரஞ் சோதியைநாம்
சந்தத மும்பாடிப் பேரின்ப வாழ்வுற்றோம்
அந்தமாய் நாமட்டும் அனுபவித் தல்அழகோ
இந்தஉல கப்பெண்கள் எல்லோரை யுஞ்சேர்த்து
சிந்தை மகிழ்வாகப் பாடிநா மின்புருவாய்
சந்ததம் பேரின்ப சாகரத்தி லேமூழ்கி
விந்தையாய்ப் பாடி விளையாடி எல்லோரும்
அந்தமில் நின்றோமென் றுடேலோ ரெம்பாவாய். 29

(க - ரை).—என்றும் முடிவில்லாத ஆதிவில்வவனத்தல மென்னும் தஞ்சையம்பதியில் எழுந்தருளி யிராநின்ற பரஞ் சோதி ஈசுரரை அனுதினமும் பாடி ஆடி நாம் மட்டிலும் வாழ்வது அழகாகுமா? இந்த உலகப் பெண்கள் எல்லோரை யும் சேர்த்து ஆனந்த வடிவமாகப் பேரின்பக் கடலில் வீழ்ந்து ஆடிப்பாடி விளையாடி முடிவில்லாது நின்றோமென்று ஆடு வோமாக என்பதாம்.

திருஞானப் பாவை திருப்பாடல் முப்பதொன்றை
திருமண மாகிய பெண்கள் மெய்யன்புடன்
ஒருமனத் துடனே உண்மைசேர் தூயவராய்
விரும்பியே சித்திரை நீராடிப் பாடினால்
பெருமைசேர் தஞ்சைப் பரஞ்சோதி யின்னருளால்
திருஞானம் பெறுவர் சித்தும்பே ரின்புறுவர்
இருவினை நீப்பர் இன்பாய்வாழ்ந் தும்சோதி
உருவினைச் சேர்வரென் றாடேலோ ரெம்பாவாய். 30

(க - ரை).—திருஞானப் பாவையாகிய அழகு மிக்கப் பாடல்கள் முப்பத்து ஒன்றைத் திருமணமான பெண்கள் எல்லாம் ஏக மனதுடனும் அகம் புறமும் தூய்மையும் மெய் மையும் வாய்ந்தவர்களாகச் சித்திரை மாதம் சூரிய உதய மாகும்பொழுது நீராடிப் பாடினால் ஈசுவர கிருபையால் திரு ஞானத்தையும் சர்வசித்திகளையும் பேரின்ப போகத்தையும் பெறுவர். இருவினைகளையும் நீத்து ஆனந்தமாக வாழப்பெற்று முடிவில் பரவொளியில் கலக்கப் பெறுவர் என்று ஆடுவோ மாக என்பதாம்.

வாழ்க பரஞ்சோதி வாழ்க பரஞானம்
வாழ்க பர இன்பம் வாழ்க பரபோகம்
வாழ்க பரமோனம் வாழ்க பரசுகம்
வாழ்க பரஅறிவு வாழ்க பர அன்பு

வாழ்க பரசித்தம் வாழ்க பரசுத்தம்
வாழ்க பரமமழை வாழ்க பரவிளைவு
வாழ்க பர அறம் வாழ்க பரஞானி
வாழ்க பரஉயிரென் ருடேலோ ரெம்பாவாய். 31

(க - ரை).—சர்வத்திற்கும் காரணமாக விளங்கக்கூடிய பரஞ்சோதியாகிய மேலான ஒளி வாழ்க. அதை அறிந்தும் அடைவிக்கக்கூடிய மேலான .போதம் வாழ்க. இதனுல் அனுபவிக்கக்கூடிய மேலான இன்பமும் போகமும் வாழ்க. சர்வமும் கடந்த மேலான மாமௌனம் வாழ்க. இதனுல் அடையும் மேலான சுகம் வாழ்க. மேலான உணர்வு வாழ்க. இதை அடையக்கூடிய மேலான இறை அன்பு வாழ்க. மேலான அருள் ஞான மழை வாழ்க. ஞானனந்தமாகிய மேலான விளைபோகம் வாழ்க. மேலான தருமமாகிய மெய்ஞ் ஞானப் போதனை வாழ்க. இதை போதிக்கக்கூடிய மேலான ஞானிகளாகிய மகான்கள் வாழ்க. பரஞ்சோதியாகிய பிரமத்தில் ஐக்யம் அடையக்கூடிய மேலான ஆன்மாக்கள் வாழ்க என்று நீராடிப் பாடுவோமாக என்பதாம்.

ஓம் சாந்தி — ஓம் சாந்தி — ஓம் சாந்தி

உலகெலாம் இன்ப உருவமாய் வாழ்க.

---

ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள்
அருளிய

# போற்றித் திருப்பஞ்ச தசி

(சிவார்ச்சனைக்குரியது)

**மகா கணபதி வணக்கம்**

அகரமா வடிவாய்ச் சர்வ அண்டங்கள் தமைய ளித்தும்
உகரமா வடிவாய்ச் சர்வ உயிரெலாம் அருளிக் காத்தும்
மகரமா வடிவாய்ச் சேர்க்கும் மாசிவம் அமிர்தப் பாடல்
பகரமா வடிவாம் தொப்பைக் கணபதி பாதம் போற்றி.

சிவமெனும் எந்தாய் போற்றி
சின்மயப் பொருளே போற்றி
தவமுறும் இறைவா போற்றி
சச்சிதா னந்தா போற்றி
அவமறும் ஒளியே போற்றி
ஆனந்த வடிவே போற்றி
பவமறும் மருந்தே போற்றி
பரமனே போற்றி போற்றி. 1

சங்கரா சர்வா போற்றி
சகத்திரா ஏகா போற்றி
பொங்கரா வணிந்தோய் போற்றி
புனிதனே அநாதி போற்றி
மங்களா அமிர்தா போற்றி
மான்மழுக் கையா போற்றி
கங்கைசேர் சடையாய் போற்றி
கர்த்தனே போற்றி போற்றி. 2

தந்தையுந் தாயே போற்றி
சகமெலாம் ஈன்றோய் போற்றி
சிந்தையும் உணர்வே போற்றி
தேகமும் உயிரே போற்றி
அந்தமும் இன்பே போற்றி
அன்புடன் அறமே போற்றி
பந்தமும் நீக்கும் ஞானப்
பரிதியே போற்றி போற்றி. 3

விண்ணுடன் ஐந்தே போற்றி
மேவிடும் சுகமே போற்றி
எண்ணுடன் எழுத்தே போற்றி
இரவியும் மதியே போற்றி
கண்ணுடன் மணியே போற்றி
காட்சியும் ஒளியே போற்றி
பண்ணுடன் பொருளே போற்றி
பரசிவா போற்றி போற்றி. 4

சுத்தமா வெளியே போற்றி
சொற்பதம் கடந்தோய் போற்றி
நித்தியா னந்தா போற்றி
நிர்குண நிமலா போற்றி
வித்தியா தரனே போற்றி
விளங்குமெய்ப் பொருளே போற்றி
முத்தியா மமிர்த ரூப
முத்தனே போற்றி போற்றி. 5

ஈசனே போற்றி உண்மை
இறைவனே போற்றி அன்பர்
நேசனே போற்றி யென்றும்
நிர்மலா போற்றி பாவ
நாசனே போற்றி சர்வ
நாதனே போற்றிக் கைலை
வாசனே போற்றி யெல்லாம்
வல்லவா போற்றி போற்றி. 6

முத்தனே போற்றி தேவர்
முதல்வனே போற்றி வல்ல
சித்தனே போற்றி ஞானச்
செல்வனே போற்றி உண்மை
அத்தனே போற்றி என்றும்
ஆனந்தா போற்றி சர்வ
வித்தனே போற்றி மேலாம்
விமலனே போற்றி போற்றி. 7




கர்த்தனே போற்றி முக்கண்
கடவுளாய் நின்றோய் போற்றி
நிர்த்தனே போற்றி யெங்கும்
நிறைந்தருள் பரனே போற்றி
பித்தனே போற்றி மிக்கப்
பேரருள் வடிவே போற்றி
சுத்தனே போற்றி யொப்பில்
சுந்தரா போற்றி போற்றி. 8

ஆதியே போற்றி என்றும்
அந்தமிற் பரனே போற்றி
சோதியே போற்றி மிக்கச்
சூக்குமப் பொருளே போற்றி
நீதியே போற்றி இன்ப
நிர்த்தனே போற்றி அம்பாள்
பாதியே போற்றி மேலாம்
பரம்பொருள் போற்றி போற்றி. 9

அருவமாய் நின்றோய் போற்றி
அருவுரு வானாய் போற்றி
சருவமாய்த் திகழ்ந்தாய் போற்றி
தத்துவம் கடந்தோய் போற்றி
ஒருவரும் அறியாய் போற்றி
உயிரெலாம் கலந்தோய் போற்றி
கருணையாம் உருவே போற்றி
கடவுளே போற்றி போற்றி. 10

உலகெலாம் படைத்தோய் போற்றி
உள்ளிருந் தருள்வோய் போற்றி
நலமெலாம் தருவோய் போற்றி
நாடியும் காப்போய் போற்றி
தலமெலாம் அழிப்போய் போற்றிச்
சார்ந்திடச் செய்வோய் போற்றி
பலவினை தீர்ப்போய் போற்றிப்
பரசுகா போற்றி போற்றி. 11

தேவரைக் காத்தோய் போற்றி
திரிபுர மெரித்தோய் போற்றி
மூவரு மானாய் போற்றி
முத்தொழில் செய்வோய் போற்றி
பாவங்கள் தீர்ப்போய் போற்றி
பரகதி அருள்வோய் போற்றி
யாவையும் கடந்தோய் போற்றி
அரகரா போற்றி போற்றி. 12

அன்பர்கட் கருள்வோய் போற்றி
அகத்தினுள் நின்றோய் போற்றி
துன்பங்கள் தீர்ப்போய் போற்றி
சுகமெலாம் தருவோய் போற்றி
தென்புறச் செய்வாய் போற்றி
தீவினை அறுப்போய் போற்றி
இன்பமும் அளிப்போய் போற்றி
இறைவனே போற்றி போற்றி. 13

திங்களும் கொன்றைச் சூடித்
திருவுமை கொண்டோய் போற்றி
பங்கயத் தயனு மாலும்
பணிந்திடும் பரனே போற்றி
மங்கிடா விளங்கி நிற்கும்
மாபரஞ் சுடரே போற்றி
எங்கணும் நிறைந்து நின்ற
ஏகனே போற்றி போற்றி. 14

கற்பனை முதலா யாவும்
கடந்துநின் றருள்வோய் போற்றி
அற்புத மாக நின்றும்
ஐந்தொழில் செய்வோய் போற்றி
தற்பரஞ் சோதி யாகிச்
சகமெலாம் நிறைந்தோய் போற்றி
சிற்பர வெளியாய் நின்ற
சிவசிவா போற்றி போற்றி. 15

ஓம் - சாந்தி - சாந்தி - சாந்தி.

கேதார்நாத் அச்சகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.